# சவப்பெட்டி



ஈழ வானமெங்கும் யுத்த மேகங்களின் சலசலப்பு,
இடியும், மின்னலுமாய் ஆயுதங்களின் ஆர்ப்பரிப்பு
மண்ணெங்கும் இரத்தக் கறை, ஓயாது ஒலிக்கும்
துக்கப் பறை, தாய்க்குலத்தின் ஒப்பாரி, அழுகை



வரட்சியால் வாடும் கிரமத்தில் வறுமையின் ஆட்சி
பசுமையிழந்த கழனிகளில் களையின் மாட்சி-உழவு
துறந்து உறவுகளைக் காக்க இராணுவத்தில் சேரும்
இளைஞர் உள்ளத்தில் சூனியத்தின் ஆட்சி



செல்வர் குழந்தைகளுக்கோ மேல் நாட்டுக் கல்வி
படிப்பை துறந்த ஏழைகளுக்கோ ஆயுதப் பயிற்சி
இளைஞர், யுவதிகள் நாளும் உயிரிழக்க,
ஈழத்தை வாட்டும் இனவாத அசுர வேள்வி

பசிப்பிணி போக்க காமத் தீ மிதிக்கும்
மங்கையர் கலாச்சாரம், யுத்தமும் விபச்சாரம்
இரத்த வெறியரின் விடுதலையும் அபச்சாரம்
நாடோ நாறிப்போன விவகாரம்



மடிந்தவர் இராணுவத்தினர் தோள்களில் சவப்பெட்டிகளில்
வீடு வந்தார், ஓடி ஆடிய மைந்தன் முகத்தை உறவுகள் காணமல்
ஒப்பாரி வைத்து அழ இடமில்லாமல் அரச முத்திரையிட்டு
மூடிய பெட்டிக்குள் உறங்கி, மண்ணுக்குள் புதைந்து மறந்தார்

மழையின்றி நிலம் பாளம் பாளமாய் வெடிக்க,
வற்றிய குளத்தில் எஞ்சிய நீரை சூரியன் உறிஞ்சிக்
குடிக்க, குளத்தில் நீர் மொள்ள, கோலூன்றி,
குடத்தோடு வந்த பார்வையிழந்த முதியவர் அப்புகாமி



குடத்தில் வாயில் பழந்துணியை கட்டி
கலங்கிய நீரை சிரட்டையால் அள்ளி ஊற்றியபடி
வான் பார்த்த விழிகளில் வெறுமை-பொத்தல்
குடிலை வாட்டும் வறுமையோ பெருங்கொடுமை

மாமா சொல்லியிருந்தால் நானே நீர் கொண்டு தந்திருப்பேன்,
அன்போடு உறவாடிய மருமகன், பார்வைதான் இல்லை
ஆனால் உடலில் பலமுண்டு என் கூரையை மேய்ந்து கொடு
நாளை மறு நாள் மழை பெய்வது நிச்சயம்

சூரியன் சுட்டுத் தீய்க்க, ஊரே வரண்டு காய,
நாளை மறுநாள் மழை வரும்
நம்பமுடியாத கதை, வியப்போடு நோக்கிட
சிரிப்போடு நடந்த பெரியவர்



தணிக்கையான செய்திகளில் உண்மையில்லை
தவித்துப் பதறும் பெற்றோர் வயிற்றில், சோக
எரிமலையின் தொல்லை, திண்ணையில் உறங்கி,
திண்ணையில் வாழும் மனதில் ஓயாத கவலை

போரும் ஒரு நாள் முடியும், செல்ல மகனும்
ஒரு நாள் வருவான், வறுமைப் போர் ஒழிய
வாழ்வு வளமாய் மாறும், தங்கையின் மணவாழ்வு
மங்கலமாய் நிறைவேறும், தந்தையின் கனவானது

பீத்தல் கூரை நிலவைக் காட்ட,-மகன்
கட்டத் தொடாங்கிய வீடு பணமின்றிப் பாதியில் நிற்க,
வட்டியும் முதலோடும் பட்ட கடன் வானில் ஏறிட
நகரத்தில் வேலைக்குப் போகும் சின்ன மகள்

வேலையும் வேண்டாம் , கூலியும் வேண்டாம்
ஊரே கெட்டுக் கிடக்குது, எங்கும் விபச்சாரம் நடக்குது
செங்கல் சுட்டு நான் உன்னைக் காப்பேன், இல்லையேல்
நானும் இராணுவத்தில் சேருவேன் தர்க்கித்த காதலன்



தரம் கெட்ட பெண் நானில்லை,
என் தந்தையின் இரத்தம் என்னில் ஓடுது
மானத்தோடு உழைக்கும் ஏழை
வறுமை நீங்க வேலைதான் பாதை




காதலன் சொல் கேளாது கன்னி
வேலைக்குச் செல்ல, காதலும் கசந்தது,
கன்னியை நோக்கலும் கண் மறைந்தது
கன்னி மனதில் வேதனை நிலைத்தது

வாசலில் ஏதோ ஆரவாரம், வருவது யாரெனத் தவிக்க
இராணுவம் தோளில் சுமந்து வந்த சவப்பெட்டி
ஒடுங்கிய வாசல் வழியே உள்ளே நுழைந்து வைத்தவர்
மரியாதை செலுத்தி தந்தைக்குச் சொன்ன துக்க சேதி

***உங்கள் மகன் மாண்டுவிட்டார்-போரில்***
***தேசத்திற்காய் தன்னுயிர் நீத்தார்***

கண்ணி வெடியில் சிக்கி உடல் துண்டு துண்டானது
அரச முத்திரை குத்தி மூடிய பெட்டியை திறக்க முடியாது
ஆழ்ந்த அநுதாபம் தெரிவித்த வீரர் -அழத்தெரியாமல்
விக்கி நின்ற தந்தையிடம் விடை பெற்ற சகதோழர்

அக்கா, தங்கை ஓ வெனப் புலம்ப, ஊரார் கூடி வந்து
துயர் பகிர-கடுஞ் சமர், புலிகளுக்கும் பலத்த சேதம்,
அரச இழப்பீடு ஒரு இலட்சம், விரைவில் கிட்டும்
அநுதாபம் தெரிவித்த கிராம சேவகர் சொன்ன சேதி



சுற்றியிருந்து சொந்தமழ, வான் வடித்த கண்ணீர்
மழை நீராய் பொத்தல் கூரை வழியே பெட்டியில் பட
பெட்டியை நகர்த்தி, பெருஞ்சோகத்தை பகிர்ந்த
உறவுகள், துக்கத்தில் துணை நின்ற ஊரர்கள்



சொன்னபடி பெய்த மழை, சொட்டுச் சொட்டாய்
சவப்பெட்டியைத் தொட்டழுது துயர் பகிர்ந்த இயற்கை,
போராட்டமான வாழ்வில் இனிப் புலம்பியழ ஏதுமில்லை,
இருந்த ஒரு நம்பிக்கை இடிந்து போன துயரக் கதையானது

வாழ்வும் துக்கம், சாவும் துக்கம், பற்றும்
துக்கம், வருவதை ஏற்ற தந்தை மனம்,
வாசற் திண்ணையில் ஒடுங்கி,
தேற்றிட யாருமின்றி தனிமையில் தேம்பியது



கண்ணீர் கடைக்கண் வழியே கசிய
குமுறும் இதயம் புலம்ப வழியின்றித் தவிக்க
மூச்சோ பெருமூச்சாகித் தகிக்க-மகனே!,
என் மகனே குமுறிய தந்தை உள்ளம்



பிக்குகள் பிரித் ஓதி, உறவுகள் கூடியழுது
உரார் சேர்ந்து கூட்டமாய் வர, கிராமத்து
சேமக்காலையில் புதைத்த சவம்,
தந்தை நெஞ்சுக்குள் மகனோ வாழும் சிவம்

அன்னதானத்திற்காய் பணமின்றித் திண்டாடிய உறவுகள்,
அந்தியில் வந்து மாண்ட தம் நண்பனுக்காய்
தம்மிடையே சோத்த பணத்தைக் கொடுத்து
சோகம் பகிர்ந்த சொந்தமாய் இராணுவத்தினர்





“ஒரு இலட்சம் இழப்பீடு” பத்திரத்தோடு வந்த
கிராம சேவகர், சீக்கிரம் நிரப்பி தந்தை
கையொப்பமிட்டால் கையில் பணம், கடன்
தொல்லை, தீரும், வீடும் கைவந்து சேரும்

நீர் ஏந்தி விழியாட, நினைவேந்தி மனம் வாட,
விளக்கேற்றி, மலர் தாங்கி , போதி மரத்திற்கு
நீர் ஊற்றிக் குமுறிய நெஞ்சம்-புலம்பிடும் மனதிற்கு
திண்ணையோ மஞ்சம், போதிமாதவனோ தஞ்சம்

உறவுகள் இழப்பீட்டை பெறத் துடிக்க, தந்தையோ
கையொப்பமிடத் தவிர்க்க, உறவுக்குள் விரிசல்
வெடிக்க, விழியிழந்தவனுக்கு ஏனோ செல்வம்?
என் செல்வமோ மண்ணுக்குள் புதைந்த அவலம்

சோகத்தின் உச்சத்தில் புதைகுழியை தோண்டி மடிந்தவன்
என் மகன்தானோ அறிய முற்பட்ட தந்தை-கண்ட
நீர் மொள்ள வந்த நங்கை, உறவுகளுக்குச் சொன்ன சேதி,
பதறி ஓடி வந்த உறவுகள் நெஞ்சிலே பெரும் பீதி

மகன் முகத்தைப் தொட்டுப் பார்க்க வேண்டுமா? மாமா
மனம் விட்டு அழ வேண்டுமா? நான் உதவுகிறேன், மருமகன்
குழியைத் தோண்டி, ஊரார் துணையோடு வெளியே
எடுத்து, முத்திரையை உடைத்து திறந்த பெட்டி





பெட்டியைத் திறந்தவருக்கு அதிர்ச்சி
அடுக்கி வைத்த இரண்டு மரத்துண்டுகள்-உறவையும்
ஊராரையும் பார்த்து நகைக்க-துக்கத்தோடு
பார்த்த உறவுக்கும், ஊருக்குமோ பேரதிர்ச்சி

என் மைந்தன் எங்கே? மடிந்தவன் உடலம் எங்கே?
விக்கித்த தந்தைக்கு விளங்கிய உண்மை, கண்ணி வெடியில்
சிக்கி அடையாளம் காணமுடியாது சிதைந்த தேகங்கள்
சிதறிய உடலங்கள், ஒருபோதும் வீடு வந்து சேராது

முத்திரையிட்டு மூடி, தேசக் கொடியால் போர்த்த
வெற்றுச் சவப்பெட்டியோ, இராணுவ சம்பிரதாயம்

தடுக்கப் பதறி ஓடி வந்த கிராம சேவகர், வெள்ளம்
தலைக்குமேல் போவதைக் கண்டு, மகன் மடிந்து விட்டான்,
பணத்தைப் பெற்று வாழ்வைத் தொடருங்கள்
நடந்தவற்றை மறந்து விடுங்கள்-

கூறித் திரும்பியவர், கோலோடு தட்டுத் தடுமாறி
தொலைவில் துறவியைப்போல் பற்றற்று
நடக்கும் பெரியவரைக் கண்டு விக்கித்தார்-ஆடிய
தன் நாடகம் அம்பலமானதென அறிந்து வெட்கித்தார்



மழை பொழிந்து குளம் நிரம்பிட, கூடை கொண்டு
மீன் பிடிக்கும் மீனவர், களிப்போடு கூச்சலிட்டு நீராடி
விளையாடும் சிறுவர்கள், நீர் மொள்ள வந்த பெரியவர்,
சிறுவர் களிப்பில் தன்னை மறந்து புன்னகைத்த வறியவர்



-------------------



அந்தியில் வந்தது அழகிய பௌர்ணமி நிலா
வண்ணக் குமுதங்கள் பூத்தாடி வரவேற்க
கண்ணாளனே நீ வரவில்லை, உன்னைக் காணமல்
வாடும் உன்தன் பெண்ணிலவிற்கோ ஒளியில்லை

போராடச் சென்ற காதலன்-குருதி நீராடி பிணமாய்
சவப்பெட்டியில் வந்த சேதி கேட்டு வண்ணம் குலைந்த
ஓவியமான கன்னி விழிகளிலோ கண்ணீர், ஒற்றைக்
குயிலாய் கரையும் இதயத்திலோ ஒழுகும் செந்நீர்

கன்னி மனம் விம்மியழ, ஊரும் உறவும் அறியாத
ஏழைகளின் காதல், இருவர் உள்ளம் மட்டும் அறிந்த
பேரின்ப ஊடல், கனவாய், பழங்கதையாய் போனது
கண்ணீர் வெள்ளம் கரையுடைத்துப் பாயுது



ஓர் ஓலைக் குடிலுக்குள், ஓசையின்றி
அழும் பெண்மை, இடியான செய்தி கேட்டு
பூவான இதயம் சுக்கு நூறாக,
பூக்குமுன் கருகிய கன்னியின் காதல்




எழுத்துக்கள் கண்ணீரில் கரைய-இதயங்கள்
பரிமாறிய கடிதங்கள் மண்ணில் சிதறிக் கிடக்க
ஏன் பறித்தாய் என் காதலை இறைவா?
என் நெஞ்சில் ஏன் சோகத்தைப் புதைத்தாய்?

கண்ணுக்குள் விரிந்த காதலன் விம்பம்
புன்னகை மாறாத அழகன் முகம்-கன்னி
மனதிற்குள் புதைந்த கண்ணீர்க் காவியம்
கண் பார்த்து நெஞ்செழுதிய வண்ண ஓவியம்
கனவாய், பழங்கதையாய் மெல்லக்
கலைந்து போனதே, வாழ்வு சாக்கடல் ஆனதே

நீ தந்த முதல் முத்தத்தின் ஈரம் காயவில்லை
நெஞ்சில் நிலைத்த இன்பச் சுவை மாறவில்லை
மண்ணுக்குள் நீ புதைந்து மறைந்தாலும்-என்
நெஞ்சுக்குள் பூவாய் பூத்துச் சிரிக்கின்றாய்



கண்ணீராய் உருகி ஓடும் என் இதயம்-கண்ணாளா
உன்னைத் தேடுது-செந்நீர் சிந்தி மடிந்த உன் வீரம்
தேசபக்தியை, வறுமையை, நம் காதலைச் சொல்லிட,
வெற்றுச் சவப்பெட்டியில் ஊர்வலம் வேதனையானதே!



யுத்தத்தில் மனித உயிர் மலிவானது, கொல்
அல்லது கொல்லப்படுவாய் நீதியானது, ஏழைகளின்
உயிர் ஆகுதியாக, இரத்த வெறியரின் அசுர யாகங்கள்
பயங்கரவாதமாய் விடுதலைப் போராட்டங்கள்?

கண்ணோடு மறைந்த காட்சிகளின் வசந்தம்
நெஞ்சுக்குள் எரிமலையாய் வருத்தும் சோகம்
அராஜகமோ ஆளும் நிலை, விடுதலைப்
போராட்டமோ பயங்கரவாதமான அவல நிலை

இன்பம், துன்பம் இயற்கையின் நிலை
ஏற்பதும் மறுப்பதும் மனதின் நிலை
மனமழிந்தால் நம்முள் புத்த நிலை
வாழும் புத்தர் நாம் அறியாத நிலை



பற்றறுத்த மனதிற்கு வாழ்வு ஒரு விளையாட்டு
புத்த நிலையயைத் தன்னுள் கண்ட மனம்
போதி நிழலில் அமைதி கண்டு அமர்ந்த
மங்கல பௌர்ணமித் தினம்



***புத்தம் சரணம் கச்சாமி***
***தம்மம் சரணம் கச்சாமி***
***சங்கம் சரணம் கச்சாமி***

காற்றினிலே வரும் கீதம் கவலைக்கு மருந்தாகுமோ?
கண்ணீர் துடைக்க அன்னையின் கரமாகுமோ?
உனக்கு நீயே ஒளியாகிப் போ பாதையானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-24-08-2024*

During the Sri Lankan Civil War, there were instances where the Sri Lankan Army delivered sealed coffins containing wood or other materials to the relatives of deceased soldiers or civilians. This practice was generally due to several reasons:

1. **Severe Decomposition**: The bodies of soldiers or civilians who died in combat or in conflict zones might have been severely decomposed, making it difficult to transport them in a dignified manner.

2. **Destruction of Bodies**: In some cases, bodies were so severely damaged or destroyed by explosions or heavy combat that there was little or nothing left to recover.

3. **Hygienic Concerns**: Transporting decomposed or severely damaged bodies over long distances posed significant health risks, and there were concerns about spreading disease or creating unsanitary conditions.

4. **Psychological Considerations**: Showing the heavily mutilated or decomposed remains to the relatives might have been deemed too traumatic, so sealed coffins were provided instead.

5. **Lack of Identification**: In some cases, the bodies might have been unidentifiable due to the extent of damage, so the army might have chosen to send a symbolic coffin rather than risk sending the wrong remains to the family.

This practice, while controversial, was sometimes seen as a way to maintain dignity for the deceased and to protect the families from the trauma of seeing the physical condition of the bodies. However, it also led to suspicion and mistrust among the public, as families were often left uncertain about the fate of their loved ones.